[19th August 1960

*Rural drinking water scheme*

* 315- (ஆ) *Q.*—Sri S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் பாதுகாக்கப்பட்ட கிராமக் குடி தண்ணீர் திட்டத்தைப்பற்றி யு.எஸ். தூது கோஷ்டி ஆராய்ந்து வருகிறதா?

(ஆ) அதனுடைய ஆலோசனைகள் சர்க்காருக்குக் கிடைத் தனவா?

(இ) அவைகளை அமுல் நடத்த சர்க்கார் எடுத்துக்கொண்ட முயற்சிகள் யாவை?

The Hon. Sri M. A. MANICKAVELU : (அ) & ( ) The Technical Co-operation Mission Experts have submitted their report to the Government of India. who have forwarded a copy to this Government also.

(இ) The Government of India are examining the report and their decisions in the matter are being awaited.

Sri S. M. ANNAMALAI : அவர்கள் கூறிய முக்கிய ஆலோசனைகள் என்ன என்று சொல்ல முடியுமா?

The Hon. Sri M. A. MANICKAVELU : இன்னும் அந்த ரிபோர்ட்டை நானும் பார்க்கவில்லை. பார்த்ததற்குப் பிற்பாடு தான் சொல்லமுடியும்.

*Fish stalls*

* 315- (இ) *Q.*—Sri P. G. MANICKAM : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லாவிலே எத்தனை முனிசிபாலிடி களிலும், பஞ்சாயத்து போர்டுகளிலும், மீன்கள் விற்பனை செய்வதற்கான நிலையங்கள் ( stalls) சர்க்கார் உதவியோடு கூட ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன?

(ஆ) 1960-61-ம் வருடத்தில் எத்தனை இடங்களிலே மேற்கண்ட மீன் விற்பனை நிலையங்கள் ஏற்படுத்தப்படும்?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : (அ) Municipalities—Twelve (six stalls each by the Coimbatore and Tiruppur Municipalities).

Panchayats—Nil.

(ஆ) So far no proposals in this regard have been received by the Director of Fisheries either from municipalities or from panchayats.

19th August 1960]

**Sri P. G. MANICKAM :** தற்போது மேற்கொண்டு ஸ்டால்கள் தேவை என்று எத்தனை முனிசிபாலிடிகளும் பஞ்சாயத்துக்களும் சர்க்காருக்கு விண்ணப்பித்திருக்கின்றன? அவைகளுள் 1960-61-ம் ஆண்டில் எத்தனை ஸ்டால்களை எடுத்து நடத்த சர்க்காருக்கு திட்டம் இருக்கிறது ?

**The Hon. Srimathi LOURDHAMMAL SIMON :** கொடுத்திருக்கும் கேள்வி கோயமுத்தூர் ஜில்லாவைப் பொறுத்த அளவில் உள்ளது. அதற்குள்ள பதிலைக் கொடுத்திருக்கிறேன். வேறு தகவல் வேண்டுமென்றால் தனிக் கேள்வி போட வேண்டும்.

*Over-head tanks*

* 315 (ஈ) Q.—**Sri S. M. ANNAMALAI :** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) வட ஆர்காடு மாவட்டம், போளூர் தாலூகா, கடலாடி, குன்னத்தூர், குருவிமலை, நாரணமங்கலம் ஊராட்சி மன்றங்களிடமிருந்து 13—7—1959-ல் குடிதண்ணீருக்காக "ஓவர் ஹெட் டாங்குகள்" கட்ட கோரி மகசர்கள் வந்தனவா?

(ஆ) அப்படியானால், அவைகளின் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** (அ) & (ஆ) The information is being collected and will be placed on the table of the House as soon as possible.

**Sri S. M. ANNAMALAI :** இந்தத் திட்டம் தீட்டும்போது காம்ப்ரெஹென்ஸிவ் ஸ்கிமில் திட்டப்படுமா? அல்லது தேசிய குடி தண்ணீர்த் திட்டத்தின் கீழ் எடுப்பதற்கு சர்க்கார் ஆலோசனை செய்துகொண்டிருக்கிறதா? பஞ்சாயத்து போர்டுகளிடம் போதிய பணம் இல்லாததால், தேசிய குடி தண்ணீர்த் திட்டத்தின் கீழ் இந்தத் திட்டங்களை சாங்ஷன் செய்ய சர்க்கார் முன்வருமா?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** அந்தத் தகவல் எல்லாம் என்னிடத்தில் இல்லை. தகவல் கேட்டிருக்கிறோம். வந்ததற்குப் பிற்பாடு சொல்கிறோம்.

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR :** உயர் நிலைத் தண்ணீர்த் தொட்டிகளைக் கட்டிவிட்ட பிறகு, 'தண்ணீர் சுகாதார மான முறையில் இல்லை' என்று சொல்லப்பட்டு. எலெக்ட்ரிக் பம்ப் செட்டுக்குக் கனெக்ஷன் கொடுக்க மறுக்கப்படுகிறது. ஏற்கெனவே கட்டப்பட்டிருக்கும் தொட்டிகளைப் பொறுத்த வரையில், சட்டத்திலிருந்து விதி விலக்குக் கொடுத்து உத்தரவு அனுப்பப்படுமா?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** தண்ணீர்த் தொட்டி கட்டுவதற்கு முன்னாலேயே, அங்கு கிடைக்கும் தண்ணீர் சுகாதார முறைப்படி சுத்தமான தண்ணீரா என்று பார்த்துத்தான் கட்டுவது உண்டு. அப்படி இல்லாமலும் கட்டிவிடுகிறார்கள்.